# பகவத் பாதை

Sri Bagavath Mission

Flow with the Flow

## Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / பிப்ரவரி | மலர் - 5

தனிச்சுற்றுக்கு மட்டும்



Sri Bagavath

" முடிந்தது முடிந்ததுதான் நடந்தது நடந்ததுதான் "

அதை மாற்றியமைக்க முடியாது என்பதை புரிந்துகொண்டு அதனோடு முரண்படாமல் அதை அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் ஞானம்.

- ஸ்ரீபகவத்



# இறைநிலை அனுபவம்

- ஸ்ரீ பகவத்

"அனுபவங்களில் உயர்ந்தது இறைநிலை அனுபவம் என்று கூறப்படுகிறது. இறைநிலை அனுபவத்தை அடைந்திட நான் முயன்று வருகிறேன். எனக்கு உங்களால் எந்த வகையில் உதவமுடியும்?"

**Life Hugler - U.S.A.**

Email ID : lifehugler@gmail.com.

அவர் ஓர் அமெரிக்கர். நான் திருவண்ணாமலையில் தங்கியிருக்கும் வீட்டுக்கு நேர் எதிர்வீட்டில் தங்கி இருந்தார். 30-11-2011 காலை 10-00 மணி அளவில் நம்மைச் சந்தித்து இந்தக் கேள்வியை எழுப்பினார். முன் தினந்தான் நான் திருவண்ணாமலை திரும்பியிருந்தேன். என்னைச் சந்திப்பதற்குச் சில தினங்களுக்கு முன்னால் தான் அவர் அந்த வீட்டை வாடகைக்கு எடுத்திருப்பதாகவும், இரண்டு மாதங்கள் தங்கியிருக்கப்போவதாகவும், எல்லாவிதமான தத்துவங்களையும் படித்து அலுத்துப்போய்விட்டதாகவும், இறைநிலை உணர்வை அடைவதை மட்டுமே இலட்சியமாக வைத்திருப்பதாகவும் கூறினார். அவரிடம் அதுபற்றி விரிவாக உரையாடினோம்.

"நீங்கள் எத்தனை ஜென்மங்கள் எடுத்து முயற்சி செய்தாலும் இறைநிலையை அடையமுடியாது! அது நடைமுறை சாத்தியமற்ற ஒன்று. நீங்களென்ன, எவராலும் இறைநிலையை உணர்ந்து அறியமுடியாது. நாம் ஓர் அறையினுள் உட்கார்ந்திருப்பதாக வைத்துக்கொள்வோம். அந்த அறையின் தரையில் ஒரு சிறிய வட்டத்தை வரைகிறோம், இந்தச் சிறிய வட்டத்துக்குள் அந்தப் பெரிய அறையை அடக்கிவிடமுடியுமா?....

"இறைநிலை என்பது அந்த அறையைப் போன்றது. நமது உணர்வு மற்றும் அனுபவங்கள், இந்தச் சிறிய வட்டத்தைப் போன்றது. நமது உணர்வாலும், அனுபவத்தாலும் இறைநிலையை உணர்வது என்பது, சிறிய வட்டத்துக்குள் பெரிய அறையை அடக்குவதைப் போன்றதே. ஒரு வீணையை மீட்டுகிறோம். இசை வருகிறது. அந்த வீணையிலிருந்துதான் அந்த இசை வந்துள்ளது. அப்படி வெளியே வந்த இசையினுள், வீணையை அடக்கி வைக்கமுடியுமா? கடலில் அலை ஏற்படுகிறது. கடலின் ஒரு சிறிய பகுதிதான் இந்த அலை. அந்த அலையினுள் மொத்தக் கடலையும் அடக்கிவிடமுடியுமா?....

"இறைநிலையை அனுபவித்து அறிவது என்பது இப்படித்தான். நமது அனுபவங்கள் அனைத்துமே, இறை நிலையால்தான் ஏற்படுகின்றன. இறைநிலைதான் அடிப்படை; இறைநிலைதான் அடித்தளம். அனைத்து அனுபவங்களும், இந்த அடித்தளத்திலிருந்து வெளிப்படும் விளைவுகளே. விளைவுகளின் உதவியுடன் விளைவுகளுக்குக் காரணமான அடித்தளத்தை அறிவது என்பது, இயற்கைக்கு முரணானது; சாத்தியமற்றது. நாம் நமது கண்களைக்கொண்டு எத்தனையோ காட்சிகளைக் காண்கின்றோம். காட்சிகள்

அனைத்தும் நமது கண்களின் வெளிப்பாடுகளே. கண்களைக் கொண்டு காட்சிகளைப் பார்ப்பது என்பது சரியானது; இயற்கையானது. ஆனால் காட்சிகளைக் கொண்டு கண்களைப் பார்ப்பேன் என்பது முரணானது; உண்மைக்கும், இயற்கைக்கும் விரோதமானது....

"அறையினுள், சிறிய வட்டம் வரையப்பட்டுள்ள உதாரணத்தை மீண்டும் எடுத்துக்கொள்வோம். வட்டத்தினுள் அறையை அடக்கமுடியாது என்பதைப் பார்த்தோம். ஆனால் அறையினுள் வட்டத்தை அடக்கமுடியுமா?...

"உண்மையில் அந்தச் சிறிய வட்டம், அந்த அறையின் ஒரு பகுதியாகத்தான் இருக்கிறது. அது ஒரு போதும் அறைக்கு வெளியே இருந்ததில்லை. அந்தச் சிறிய வட்டமானது, தனது எல்லைக்கு முக்கியத்துவம் கொடுத்து, தனது அனுபவத்தைப் பிரதானப்படுத்துவதனால், அந்த அனுபவம், தனித்தன்மை மிகுந்த ஒன்றாகி விடுகின்றது. அனுபவத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வரையிலும், தனித்தன்மைக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கிறோம். இறைநிலை அனுபவம் வேண்டும் என்று எண்ணுவதும் தனித்தன்மைக்கு முக்கியத்துவம் கொடுப்பதே. இறைநிலை அனுபவத்தை வேண்டுவது என்பது இறைநிலையை மறுப்பதே....

"இப்படித்தான் அன்பர் ஒருவர் ஒரு கேள்வி கேட்டார். 'கடலிலிருக்கும் தண்ணீர் சூரிய ஒளியினால் ஆவியாக மாறுகிறது. பிறகு அது மேகமாக மாறுகிறது. மேகம் குளிர்ந்து மழையாகிறது. மீண்டும் அது தண்ணீராகிக் கடலிலே வந்து அடைகிறது. இப்படி இறைவனிலிருந்து தோன்றிய நாம் பல பரிமாணங்களையும் கடந்து இறைநிலையை அடையவேண்டுமா? இறைநிலையை மீண்டும் அடைவதுதான் மனித வாழ்வின் உயர்ந்த இலட்சியமா?' இப்படி அவர் இந்தக் கேள்வியைக் கேட்டார். பலரும் இப்படி எண்ணியே பலவிதமான கருத்துக்களைப் பேசி வருகின்றனர்....

"ஒரு வீணையை மீட்டுகிறோம். வீணையின் நாதம் இசையாக வெளிப்படுகிறது. வீணையிலிருந்து புறப்பட்ட இசை என்ன ஆகவேண்டும்? அது எங்கே சென்று சேரவேண்டும்? அது பல பரிமாணங்களை எடுத்து மீண்டும் வீணையைச் சென்று அடைந்திடவேண்டுமா? புறப்பட்ட வீணைக்கே மீண்டும் திரும்பிடவேண்டுமா?...

"நமக்கு அறுசுவைகளைப்பற்றித் தெரியும். நமது நாக்கின் மூலம் ஆறு சுவைகளையும் சுவைத்து அறிகிறோம். இனிப்பு, கசப்பு, புளிப்பு என வேறு வேறான சுவைகளையும் நாக்கின் மூலமாகவே தெரிந்து கொள்ளமுடிகிறது. நாம் இனிப்பைச் சாப்பிடும்போது, நமது நாக்கே இனிப்புணர்வாக மாறி இனிப்பைக் காட்டுகிறது. ஆறுவிதமான சுவை உணர்வுகளும், நமது நாக்கின் உணர்வுகளே. நமது நாக்கே, தன்னைப் பலவிதசுவையுணர்வாக வெளிப்படுத்திக்கொள்கிறது. நாம் எந்தச் சுவையான உணவையும் சாப்பிடாதபோது, நமது நாக்கு, என்ன சுவையுணர்வோடு இருக்கும்? நாம் எதையும் சாப்பிடாதபோது, நமது நாக்கு உணர்வற்றுப் போய்விடுவதில்லை. அது உணர்வோடுதான் இருக்கிறது. ஆனாலும் உணரப்படமுடியாமல் இருக்கிறது. ஏதாவது ஒரு சுவையுணர்வை அது வெளிப்படுத்தும்போது தான், அது தனது இருப்பை வெளிக்காட்டிக் கொள்கிறது.....

"நமது நாக்கின் இயற்கையான தன்மை என்ன? அதை சுவையுணர்வு என்னும் மொழியில் புரிந்து கொள்ளமுயன்றால், அதனைச் சுவை கடந்த ஒன்றாகத்தான் புரிந்து கொள்ள முடியும். உண்மையில், அத்தனை சுவைகளும் நாக்கினுடைய அம்சமேதான், நாக்கினுடைய வெளிப்பாடுதான். ஆறு சுவைகளையும் வெளிப்படுத்தும் நாக்கின் ஆதார அம்சமானது, ஆறு சுவைகளையும் கடந்த வினோதமான சுவையுணர்வாக இருக்கும் என, நாம் கற்பனை செய்து கொண்டால், அது ஆதாரமற்ற கற்பனையேயாகும்.....

"நமக்கு நமது உடலைப்பற்றித் தெரியும். நமக்குள் நமது இதயம், நுரையீரல் போன்றவை இயங்குகின்றன. அவை இயங்குகின்றன என்பது நமக்குத் தெரியும். ஆனால் அவை எவையும் வெளிப்படையாக உணரக்கூடிய வகையில் இயங்குவதில்லை. அவை அனைத்தும், இயங்குவது தெரியாமல் இயங்குகின்றன. நமது கை கால்கள் இயங்குவது மட்டும் நமக்கு வெளிப்படையாகத் தெரிகிறது. நமக்கு 102 டிகிரி காய்ச்சல் ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். காய்ச்சல் இருக்கும்போது, நமது உடல்முழுவதும், வலியும், வெப்பமுமாக இருக்கிறது. உடலிலுள்ள ஒவ்வொரு பகுதியும் வலியையும், வெப்பத்தையும் வெளிப்படுத்தி உணரவைக்கிறது...

"நாம் ஏதாவது மருந்தைச் சாப்பிட்டு காய்ச்சலைக் குணப்படுத்திக்கொள்கிறோம். உடல்வலியும், உடல் வெப்பமும் மறைந்து சகஜ நிலை திரும்பிவிடுகிறது. இப்போது நமது உடல் இருப்பதை நம்மால் உணரமுடியுமா? நமது உடல் இருப்பது தான் நமக்குத் தெரிகிறதே என்று நாம் சுலபமாகக் கூறிவிடலாம். நம் உடலின் எந்தப்பகுதியையும் நம்மால் உணரவே முடியாது; நமது கை கால்களில் கூட எந்தப்பகுதியையும் நம்மால் உணர்ந்து அறிய முடியாது. நாம் நமது காலில் ஏதாவது ஒரு பகுதியைத் தொடுவோமாயின், அப்படித் தொடுவதால் ஏற்படும் உடல் உணர்வை மட்டுமே நம்மால் உணர்ந்து அறியமுடியும். நமது விரல் நுனியைக் கூட இயற்கையான முறையில் நம்மால் அறிய முடியாது. நமது விரல் நுனியில் உணர்வின் கவனத்தைக் குவித்து, அதற்கு நமது உணர்வின்மூலம் ஓர் அதிர்வைக் கொடுத்தால் மட்டுமே, நமது விரல் நுனியை உணர்ந்து அறியமுடியும்....

"நமது உடலின் எந்தப்பகுதியையும் நம்மால் அறியமுடியாது. நமது உடல் ஏற்படுத்தும் வெளிப்பாட்டை மட்டுமே நம்மால் அறியமுடியும். நமது உடல்தான் அது வெளிப்படுத்தும் அத்தனை உணர்ச்சிகளுக்கும் ஆதாரம். ஆனாலும் நமது உடல், அதனளவில், உணர்வற்ற நிலையில்தான் அமைந்திருக்கிறது. இப்படித்தான் இறைநிலை அமைந்துள்ளது. எல்லா அனுபவங்களுக்கும் ஆதாரமான இறைநிலை, அதனளவில் அனுபவமற்று இருக்கிறது. எல்லா உணர்வுகளுக்கும் ஆதாரமான இறைநிலை, அதனளவில் உணர்வற்று இருக்கிறது....

"உணர்வது, அறிவது அனைத்தும், எல்லைப்படுத்தி அறிவதே. உண்மையில் நாம் அறிவது, உணர்வது அனைத்தும் இறை உணர்வே. அவை அனைத்தும் வெளிப்பட்ட இறைநிலையே. நாம் இதுவரை அறியாத வித்தியாசமான இறைநிலை அனுபவம் என்பது ஆதாரமற்ற கற்பனையே. வெளிப்பாடுகளை மட்டுமே நம்மால் அறியமுடியும். இறைநிலை என்பது ஒரு வெளிப்பாடல்ல. அது எல்லா வெளிப்பாடுகளுக்கும் ஆதாரமானது...

"சிலர் தங்களுடைய சூட்சும உடலுடன், தங்களது பௌதிக உடலிலிருந்து தற்காலிகமாக வெளியே வந்து விடுவதுண்டு. அப்போது அவர்களுக்கு நினைவு அம்சமான இயக்கம் மட்டுமேதான் இருக்கும். இன்ப உணர்வு - துன்ப உணர்வு போன்ற உடல் சார்ந்த உணர்வு எதுவும் இருக்காது. அவர்களுக்கு ஏற்படும் அனுபவங்கள் அனைத்தும் உணர்ச்சியற்ற அனுபவமாகவே இருக்கும். அவர்கள் மீண்டும் உடலுக்குள் நுழைந்தபிறகு தான் இன்ப-துன்ப உணர்ச்சிகள் ஏற்படும். தியானத்தின்மூலம் ஏற்படும் ஆனந்த உணர்வுகள் கூட, நாம் உடலை விட்டு வெளியே வந்த நிலையில் ஏற்படுவதில்லை. உடலோடு இருக்கும் நிலையில் தான் அவை ஏற்படுகின்றன. நமக்கு ஏற்படும் அத்தனை ஆனந்தமான உணர்வுகளும், நமது உடலின் வாயிலாக, உடல் உணர்வாகவே வெளிப்படுகின்றன. இறைநிலை உணர்வு - இறைநிலை அனுபவம் என்று தனியாக எதுவும் கிடையாது. வெளிப்படும் அத்தனை உணர்வுகளும், இறைநிலையின் வெளிப்பாடுகளே....

"இறைநிலை என்ற பெயரில் ஏதோ ஓர் அனுபவத்தையே தேடிக்கொண்டிருக்கிறோம். அப்படித்தேடிக் கொண்டிருக்கும் நாம் யார்? நான் என்பது என்ன? நான் என்பதும் இத்தகைய ஒரு வெளிப்பாடே. வெளிப்பாடுகள் அனைத்தும் விளைவுகளே. அவை அனைத்தும் நிழல்களே. வெளிப்பாடுகள் அனைத்தும் மறைந்துவிடவேண்டும். வெளிப்பாடுகளின் மீது ஈடுபாடு காட்டுவதென்பது, அவற்றை நிரந்தரப்படுத்தும் முயற்சியே. இதனால் அறைக்குள் போட்ட சிறிய வட்டத்தின் எல்லைகள் தாம் உறுதிசெய்யப்பட்டுவிடுகின்றன; தனிமைப்படுத்தப்பட்டுவிடுகின்றன.

"நமது அனுபவங்கள் அனைத்தும் இறைநிலையின் வெளிப்பாடுகளே. வந்த அனுபவங்கள் அனைத்தும் மறைந்துவிடவேண்டுவதுதான், அனுபவத்தின் இயற்கைத் தன்மை, இயல்புநிலை. அவை மறைந்துவிட அனுமதிக்கும்போது, அவை, வருவதும், ஓடிமறைவதுமான உயிரோட்டமான தன்மையைப் பெற்றுவிடுகின்றன. நமது அனுபவங்கள் யாவும் உயிரோட்டமாக அமைந்திடும்போது அவற்றின் எல்லையும் உடைந்துவிடுகின்றது. நமது அனுபவங்கள் யாவும் நிரந்தரமான பிரவாகமாக அமைந்துவிடுகின்றன. நமது அனுபவப்பிரவாகம் மட்டுமே இறைநிலையோடு சரியான தொடர்போடு இருக்கிறது....

"நாம் ஏதாவது ஓர்அனுபவத்தை - அதனை இறைநிலை அனுபவம் என்ற பெயரிலானாலும் சரி - எதிர்பார்ப்போமாயின் நமது எல்லைதான் பலமடைகின்றது. சிறிய வட்டம்தான் பலமடைகின்றது. அனுபவத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பது என்பது இறைநிலையைப் புறக்கணிப்பதே ஆகும்; இறைநிலையிலிருந்து விலகி ஓடுவதே ஆகும்; நமது தனிமையை உறுதிப்படுத்துவதேயாகும். இறைநிலை அனுபவத்தைத் தேடுவது தான் இறைநிலையைப் புறக்கணிப்பதாகும்."

- இப்படி அவரிடம் நீண்ட நேரம் உரையாடினோம்.

இறைநிலை அனுபவம் என்ற பெயரில் நம்மை நாமே எப்படி ஏமாற்றிக் கொள்கிறோம் என்பதை அந்த அமெரிக்கர் புரிந்துகொண்டார்.

தொடர்ந்து இரண்டு தினங்கள் அவர் காலையும், மாலையும் வந்து அவரது ஆன்மீக முயற்சிகள் பற்றிய சில தெளிவுகளைப் பெற்றார். மூன்றாவது நாளும், நான்காவது நாள் காலையிலும் அவர் நம்மைச் சந்திக்க வரவில்லை. நான்காவது நாள் மாலையில் (4-12-2011ல்) மீண்டும் அவர் வந்து நம்மைச் சந்தித்தார்.

இந்த முறை அவர் சந்தேகங்கள் எதனையும் கேட்டுவரவில்லை. 'எனது வீட்டைக் காலி செய்துவிட்டேன்' எனக்குத் தேவையான தெளிவு கிடைத்துவிட்டது; எனது தேடுதல் நின்றுவிட்டது. விடைபெற்றுச் செல்லவே வந்துள்ளேன்', என்று கூறி அமெரிக்காவுக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டார்.



## அய்யாவின் ஒருவருட சென்னை முகாம்

**Sri Bagavath's Chennai Address ( upto March 2013 )**







நீ அதுவாகவே இருக்கிறாய் ; அடைவற்கு எதுவுமில்லை என்பதைப் புரிந்து கொள்வதே ஞானம்.

## பகவத் பாதையில் மலர்ந்த மலர்கள்

## அருட்தந்தை வேதாத்திரி மகரிஷியும் - பகவத் ஐயாவும்

கடவுளின் அருள்பெற வேண்டி, எனது 18 வயது முதல் மதம் சார்ந்த இறைவணக்க முறைகளைத் தீவிரமாக மேற்கொண்டுவந்தேன். 30-வது வயதில் "பகவத் கீதை" படித்தேன். ஆத்ம தவம் செய்தும், குருவின் உபதேசங்களை சிந்தித்தும் தெளிந்தால் கடவுளைக் காணலாம் எனத் தெரிந்து கொண்டேன்.

33-வது வயதில் அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்களைக் குருவாக அடைந்தேன். அகத்தவம், அகத்தாய்வு பயிற்சிகளை முறையாகச் செய்து வந்தேன். தவத்தில் சமாதிநிலை கிடைத்தது. ஆனாலும் அறிவை அறியாத குறை இருந்தது. விடை காணப்படாத பல கேள்விகள் இருந்தன. அமைதித் தாகம் இருந்தது.

எனது 64-வது வயதில் 8-6-2008 அன்று ஸ்ரீபகவத் அவர்களின் "எளிது எளிது ஞானவிடுதலை மிகவும் எளிது " என்னும் நூலைப் படிக்க நேர்ந்தது. 12-6-2008 வரை அந்நூலின் சில பக்கங்களையே படித்திருந்தேன். இந்நூலின் கருத்துக்கள் ஆசான் அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்களின் கருத்துக்களுக்கு ஒத்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். ஸ்ரீ பகவத் அவர்களின் கருத்துக்கள் எனது சிந்தனைக்கு மேலும் ஊக்கமளித்தன.

"தவம் சிந்தனைக்கு வளர்ப்புத்தாய்", 'சிந்தனை தவத்திற்கு விருந்து' என்ற விவேகானந்தரின் கருத்துக்கும், நான் யார்? என்ற கேள்விக்கு விடைகண்ட 'அறிவுநிலையே ஞானம்' என்ற ரமண மகரிஷியின் கருத்துக்கும், 'சுயமாய் சிந்தித்தே தெளிவாய்' 'தெளிந்த அறிவே ஞானம்' என்ற அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்களின் கருத்துக்கும், இசைவான கருத்துக்களை ஞான விடுதலை நூலில் கண்டேன். மேலும் மேலும் சிந்தித்தேன், பல விளக்கம் பெற்றேன். ஆசான் அருட்தந்தை மகரிஷி அவர்கள் கூறியபடி மனதைத் தூய்மையிலும், அறிவை ஆராய்ச்சியிலும் வைத்திருந்தேன்.

12-6-2008 அன்று மாலை மௌனத்தில் இறைநிலை நினைவில் அமர்ந்திருந்தேன். திடீரென நொடிப்பொழுதில் பிரபஞ்ச ரகசியங்கள் அகக்காட்சிகளாக தெரிந்தன. விடை காணாதிருந்த கேள்விகளுக்கெல்லாம் விடை கிடைத்தது. மனதிற்குள் புதிய அறிவுக்கதவு திறந்த உள்ளுணர்வு ஏற்பட்டது. சிந்தனையும் தேடுதலும் நின்றுவிட்டது. மனதுக்கு பற்றற்ற நிலையும், நிறைவும் அமைதியும் கிடைத்துவிட்டது. தேடுதல் நின்றுவிட்டது. சம உணர்வும், உண்மையைப் புரிந்து கொள்ளும் திறனும் தானாக அமைந்துவிட்டது.

ஸ்ரீ பகவத் அவர்களை நேரில் சந்தித்து உரையாடியிருக்கிறேன். அவர்கள் இதுவரை எழுதியுள்ள அனைத்து நூல்களையும் படித்திருக்கிறேன்.

தன்னை அறிய ஆர்வமுள்ள சிந்தனையாளர்களில் பலர் ஸ்ரீ பகவத் அவர்களின் நூல்களைப் படித்து, சிந்தித்து ஞானமடைந்திருப்பது உண்மை. எல்லோரும் எளிதாக ஞானம் பெற இவருடைய நூல்கள் உதவுவது திண்ணம்.

"விளக்கம் சிந்தனையைத் தூண்டும், சிந்தனையில் தெளிவு பிறக்கும்

தெளிந்த அறிவே ஞானம், அறிவை அறிந்த அறிவே ஞானம்" - வேதாத்திரி மகரிஷி

ஞானம் என்றால் என்னவென்பதைப் புரிந்துகொண்டோம் என்பதையும்

புரிந்து கொண்ட மனதின் நிலையே ஞானம் - ஞானவிடுதலை. - ஸ்ரீ பகவத் ஐயா

வாழ்க வையகம் வாழ்க வளமுடன்.

நன்றி.

அருள்நிதி. வேதசுப்பையா

மனவளக்கலை மூத்த பேராசிரியர் - செல் : 9443351601

## ஆசிரியர் பகுதி

பகவத் பாதையில் நாம் இனிதே பயணித்துக் கொண்டிருக்கிறோம்.

நாளுக்கு நாள் பயணிப்போரின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே வருகிறது.

பாதையில் வரும் ஐயாவின் கட்டுரைகள் புதிய அணுகுமுறையாகவும், நல்ல தெளிவைக் கொடுப்பதாகவும், பலரும் தங்களது மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக்கொண்டிருக்கிறார்கள்.

நமது இதழில் வரும் கட்டுரைகள் அனைத்தும் ஞானத்தாகம் கொண்டவர்களுக்கு விருந்தாகவும், துயரத்தில் துன்பப்படுபவர்களுக்கு நல் மருந்தாகவும் அமைகிறது.

இப்பாதையில் பயணித்து புரிந்துகொள்வோர்கள் தங்களுக்குத் தாங்களே ஒளி விளக்காகி விடுகிறார்கள்.

இப்பாதையின் நோக்கமே அனைவரும் அக விடுதலை பெற வேண்டுமென்பதே.

இப்பணி சிறக்க பலரும் நன்கொடை வழங்கி உதவி வருகிறார்கள்.

அவர்கள் அனைவருக்கும் பகவத் பாதை, நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறது.

''பகவத்பாதை''யை நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்துவோம் அவர்களும் நலன்பெற வழிகாட்டுவோம்.

ஆசிரியர் - A. செந்தில்நாதன், 99421 81933

### ஐயாவுடைய நிகழ்ச்சி

தியானத்தை விடு! ஞானத்தைப் பெறு! என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றுகிறார்.

இடம் : **Mylapore Fine Arts Club,**
Mylapore, Chennai-4.

நாள் : **18-3-2012 Sunday**

நேரம் : **5.30 pm.**

மேலும் விபரங்களுக்கு :

செல் : 90804 29811, 97899 99333, 97109 99333

அனைவரும் வருக! அனுமதி இலவசம்!

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் புரிதலைப் புரிந்துகொண்டேன் என்பதை எப்படித் தெரிந்து கொள்வது?

பதில் : நாமாகத் தான் புரிந்துகொள்ளவேண்டும். அதாவது நமக்கு ஏற்படும் உணர்வுகள் - எண்ணம், கவலை, பயம், வெறுப்பு, காமம், பொறாமை, நான் என்ற உணர்வு போன்ற எத்தனையோ எண்ணங்கள் யாவும், உணர்வுகள் யாவும் தோன்றி மறையும் தருவாயில்தான் அல்லது வந்த பின்புதான் அவை வந்ததே நமக்குத் தெரிகிறது. அப்படி வந்த பின்பு தெரியும் உணர்வுக்கு நாம் என்ன தான் செய்யமுடியும்?. அதனால் தோன்றும் உணர்வுகள் யாவும் முடிந்தநிலையில் மட்டுமே நம்மால் அடையாளம் காணமுடிகிறது. அப்படி அடையாளம் காணும் உணர்வுகள் யாவும் இறந்ததற்குச் சமம். இறந்த உணர்வுகள் யாவும் இறந்தவைகள் தாம். அப்படி இறந்த நிலையில் உள்ள உணர்வுகளுக்கு நாமாக உயிர் கொடுப்பதால் மட்டுமே அந்த இறந்த உணர்வு உயிர் பெற்று பலமடைந்து நமக்கு வேண்டாத, தேவையில்லாத, பிடிக்காத பல தவறான செயல்களை செய்யவைத்துவிடுகிறது. முடிந்த நிலையில் உள்ள உணர்வுகளைச் சரிசெய்வதை விட்டுவிட்டு, புறவிசயத்தில் கவனம் செலுத்தினால் போதும். நமக்கு இங்கு செயல்படுவதற்கு என்ன தான் வாய்ப்பு உள்ளது என்று பார்த்தால் அகம் நம் கையில் இல்லை, புறத்தில் மட்டும் செய்வதற்கான வாய்ப்புகள் உள்ளன. நாம் புறத்தில் செய்யும் செயல்கள் நாமாக செய்வது. அது சரியானதாகவும், மற்றவரை பாதிக்காததாகவும், சமுதாயத்தை உயர்த்துவதாகவும் உள்ள வகையில் பார்த்துக்கொள்ளவேண்டும். மற்றபடி அகத்தில் எந்த உணர்வு எப்படி வேண்டுமானாலும் வரட்டும், அதுவாக வருவது எப்படி வருமோ, வரட்டும். எவ்வளவு நேரம் இருக்குமோ, இருக்கட்டும். எப்போது மறையுமோ, அப்போது மறையட்டும். நாமாக ஒன்றும் செய்யத்தேவையில்லை. எந்த வினாடி எந்த நிலையில் நமக்கு வந்த உணர்வுகளை அடையாளம் தெரிகிறதோ, நமக்கு தெரிவதற்கு முன்பாக நாமாக அந்த உணர்வை எதிர்த்து எவ்வளவு நேரம் போராடி இருந்தாலும் பரவாயில்லை. அதுவரை நமது கவனத்திற்கு தெரியாததற்கு நாம் என்னதான் செய்யமுடியும்?. நமக்குத் தெரிந்திருந்தால் நாம் போராடாமல் இருந்திருப்போம். தெரியாததற்கு நாம் பொறுப்பல்ல. தெரிந்த நிலையில் நாமாக மேலும் போராடாமல் விட்டுவிட்டால் போதும். அந்த அக உணர்வின் போராட்டத்தின் கால அளவு படிப்படியாக குறைந்து கொண்டே வரும். (உதாரணம் 5வது Speedல் ஓடிக்கொண்டிருக்கின்ற ஓர் FAN Switch Off செய்தபிறகு உடனே நின்று விடுகிறதா? Speed 5ன் வேகம் 4, 3, 2, 1, 0 எனப் படிப்படியாகக் குறைந்து, பின்பு தான் நிற்கும்). அதுபோல் நமது அகப் போராட்டத்தின் போராட்டம் படிப்படியாகத்தான் குறைந்து அமைதியை நோக்கிச் செல்லும். கலங்கிய குளம் மெல்ல மெல்லத் தெளியத் தொடங்கும். குளம் எப்போது தெளியும் என்றும், FAN எப்போது நிற்கும் என்றும், அகப்போராட்டம் எப்போது நிற்கும் என்றும் ஆராய்ச்சி செய்யத்தேவையில்லை. எப்போது எல்லாம் நமக்கு வந்த உணர்வுகளை நம்மால் அடையாளம் காண முடிகிறதோ அதற்குப்பிறகு அகத்தில் போராடாமல் விட்டுவிட்டு தொடர்ந்து புற வாழ்வில் பயணித்தால் போதும். நம்மை அறியாமலே புற ஒழுக்கம் ஒழுங்குபடும். நாம், நமது குடும்பம், தொழில், சமுதாயம் என்று எல்லாவற்றிலும் நல்ல மாற்றம் ஏற்படமுடியும். இப்படி மாற்றம் ஏற்படுவது மட்டுமே புரிதலைப் புரிந்து கொண்டதின் அடையாளம். நமக்கு என்று ஒன்றுமில்லை. நமது செயல்கள் எல்லாமும் நல்லதாக அமையும்.

**V.A.P. சரவணன்,** சேலம்.
செயலாளர், ஸ்ரீபகவத் மிஷன்,
செல் : 9994205880

## ஜென்கதை

ஜென் துறவி ஒருவரைத் தூக்கிலிட உத்தரவிட்ட அரசன், அவரை அழைத்து, "உனக்கு இன்னமும் இருபத்து நான்கு மணி நேரம் தான் இருக்கிறது. நீ அதை எப்படி வாழப்போகிறாய்?" என்று கேட்டான். இதைக் கேட்டு சிரித்தவாறு துறவி சொன்னார். "எப்பொழுதும் வாழ்வது போல் - கணத்துக்கு கணம்! என்னைப் பொறுத்தவரையில் இந்தக் கணத்துக்கு மேலே எதுவும் கிடையாது. ஆகவே எனக்கு இன்னும் 24 மணி நேரம் இருந்தால் என்ன? 24 வருடம் இருந்தால் என்ன? இதில் எந்த வித்தியாசமும் இல்லை. நான் எப்போதுமே கணத்துக்கு கணம் வாழ்ந்து வந்திருப்பதால், இந்தக் கணமே எனக்கு அதிகம்தான். 24 மணி நேரம் என்பது எனக்கு மிக அதிகம்; இந்த ஒரு கணமே போதும்!"

"நிகழ்காலம் மட்டுமே நிஜம், இறந்தகாலம் என்பதும், எதிர்காலம் என்பதும் வெறும் கற்பனையே"

நன்றி - "ஓஷோ வின் எதிர்ப்பிலேயே வாழுங்கள்"
கண்ணதாசன் பதிப்பகம்.

நான் எப்போதுமே கணத்துக்கு கணம் வாழ்ந்து வந்திருப்பதால், இந்தக் கணமே எனக்கு அதிகம்தான்.



# ஞானத் தெளிவு

அவன் ஞானத் தெளிவு பெற்றுவிட்டதை உணர்ந்தான். ஒரே நாளில் அவனது ஆன்மீகத் தேடல்கள், கேள்விகள் அனைத்தும் முடிவுக்கு வந்துவிட்டன. இதுவரை அதைப்படிக்க வேண்டும், இதைச் செய்ய வேண்டும் இப்படியே படிப்படியாகப் போய் ஞானத்தை அடைந்து விடவேண்டும் என்ற விடாமுயற்சிகள் எல்லாம் அந்தரத்தில் இருந்து அறுந்து விழுந்தன.

இனி - தேடலும் இல்லை; கேள்வியும் இல்லை. எதையோ அடையும் ஆன்மீக ஆசையும் இல்லை. பிரவகித்து ஓடும் மனதை அனுமதித்தான். தேங்கி நின்று, போராட்டகளமாயிருந்த மனது, தெளிவாகி, லேசாகி, போராட்டத்தைக் கைவிட்ட மனதானதை உணர்ந்தான்.

'ஞான விடுதலை' - இவ்வளவு எளிது என்பதை ஆழ்ந்து அனுபவத்தில் உணர்ந்தான். குருவும் கூட 'ஞானம்' பெற்றதை அங்கீகரித்தார். அவரோடு மனதளவில் ஒன்றினான். தன்னுள் போராட்ட மனதின் காரணமாக வீணாகிக் கொண்டிருந்த ஆற்றல் அபரிமிதமாகத் தன் கையில் கிடைத்திருப்பதை உணர்ந்தான். வெளிவேலைகளில் கவனம் செலுத்தினான். முன்பு 5 நாட்களில் எடுத்துக்கொண்ட வேலைகள் 1/2 நாள் 1- நாளில் முடிவடைந்தது கண்டு சந்தோஷமடைந்தான். இன்றாவது ஞானம் கிடைக்க வழிசொன்ன குருவுக்கு நன்றிகளையும், வணக்கங்களையும் காணிக்கையாக்கினான்.

தான் ஞானத்தெளிவு பெற்று விட்டதை பிறரிடம் அடக்கத்துடன் தெரிவித்துக் கொண்டான். ஏதேதோ வித்தியாசமான அனுபவங்கள் புதிது புதிதாக வந்தன; அவற்றை அனுபவித்துக் கொண்டே நடந்தான்.

புறச்செயல்களில் சிறப்பாகச் செயல்பட்டான். பல்வேறு சூழ்நிலைகளுக்கு ஏற்ப தனக்குள் உணர்வுகள் - ஆசை, கோபம், வெறுப்பு, பயம், பொறாமை, காமம் - என்று எத்தனையோ அனுபவங்கள் தோன்றிய போதெல்லாம் 'அது தானா வருது .... நம்மால் எதுவும் செய்ய முடியாது' என்ற புரிதலினால் அவற்றை கடந்து போக அனுமதித்தான்.

சில புறப்பிரச்சனைகளின் தாக்கம் நீடித்து நின்றபோது - ஞானத்தெளிவு பெற்றது உண்மைதானா என்ற சந்தேகம் எழுந்தது. குருவைத்தேடிச் சென்றான். "தெளிவு முடிச்சு விழுந்தால் விழுந்தது தான்; அது மாறாது. இதுபோல் சந்தேகம் வந்தால் அது பலவீனமடைந்துவிடும். எந்த மனப்போராட்டமானலும் ஞானம் அடைந்தவர்கள் 'தஞ்சாவூர் தலையாட்டி பொம்மை' போல் மீண்டும் விரைவில் நிலைக்கு வந்து விடுவார்கள். மற்றவர்கள் அந்த சிக்கலில் மாட்டிக்கொண்டு விடுபடுவதற்குப் போராடுவார்கள். இதுதான் வித்தியாசம்" என்றார்.

மிகுந்த உற்சாகமடைந்தான். தான் ஞானத்தெளிவு பெற்றதன் பலனாக தான் விரைவில் பிரச்னைகளிலிருந்து விடுபட்டு விடுவதையும், மற்றவர்கள் மாட்டிக்கொண்டு விழிப்பதையும் கற்பனை செய்து பார்த்தான். தனக்குத்தானே சந்தோஷப்பட்டுக் கொண்டான்.

ஆனாலும் ஒவ்வொரு நாளும் புதிது புதிதாகப் புற உலகின் நிகழ்ச்சிகள் வந்து கொண்டேயிருந்தன. ஒவ்வொன்றும் தன் சக்திக்கு ஏற்ப இவனுள், பயம், ஆசை, கோபம், வெறுப்பு, பொறாமை, சந்தேகம் என்று ஏதேதோ எண்ணங்களை, உணர்வுகளை தூண்டிவிட்டுக் கொண்டே இருந்தன. தன் இயல்பிலிருந்தும் பதிவிலிருந்தும், சூழ்நிலைக்கு ஏற்ப இத்தகைய உணர்வுகள் எழுவது கண்டு திகைத்தான். ஆனாலும் அவற்றை எதிர்த்து ஏதும் செய்யத் தேவையில்லை, செய்ய முடியாது என்ற புரிதல் செயல்பட்டு அவனைக் காப்பாற்றிக் கொண்டு தான் இருந்தது. இருந்தாலும் சந்தேகம் வந்துவிட்டது அவனுக்கு. எவ்வளவு காலம் தான் இத்தகைய உணர்வுகள் வரும்? எப்போதுதான் தீரும்? உண்மையில் ஞானமடைந்தவர்கள், ஞானிகள் எந்தச் சலனத்திற்கும் ஆட்படாமல் இருந்த கதையெல்லாம் படித்திருக்கிறான். அப்படி என்றால் கஷ்டப்பட்டு ஞானம் கிடைத்திருந்தால் தான் அத்தகைய 'சமநிலை' வருமோ? நாம் லேசாக, ஒருநாள் புத்தக வாசிப்பில் வந்த ஞானம் வலுவற்றதா? அஸ்திவாரம் இல்லாத கட்டிடம் போல் ஆட்டம் கண்டுவிட்டதோ? ஞானம் கிடைத்தது உண்மைதான். அது எளிதாகக் கிடைத்துவிட்ட ஞானம். அது கிடைத்த பிறகாவது அதை வலுப்படுத்த நாம் யோகா, தியானம் போன்றவற்றைப் பயிற்சி செய்து அதை வலுப்படுத்தியிருக்க வேண்டுமோ? அல்லது ஏதாவது மனோதத்துவ முறையில் சிகிச்சை எடுத்துக் கொண்டு, பழைய மனப்பதிவுகளை எல்லாம் அழித்துவிட்டு, தெளிவான, களங்கமற்ற ஞானத்தோடு இருக்க நாம் முயற்சி செய்ய வேண்டுமோ?...

சந்தேகம் கேள்விப் பெருவெள்ளத்தை திறந்து விட்டுவிட்டது. தடுமாறிப் போனான். சக "ஞானி"களிடம் சந்தேகம் கேட்டான். "ஞானத்தில் தான் இருக்கிறீர்களா?" என்று. ஒரு சிலர் எனக்கு ஒன்றும் தெரியலை. நான் எப்போதும் போலத்தான் இருக்கிறேன் என்றார்கள். ஒன்று நாம் பெற்றது ஞானம் தானா என்பதைப் பற்றிய தெளிவு பெற வேண்டும். அல்லது பெற்ற ஞானத்தை நிலை நிறுத்தும் வகையில் ஏதாவது, சிகிச்சையோ அல்லது பயிற்சியோ செய்ய வேண்டும் என்று முடிவெடுத்தான்.

எதற்கும் ஐயாவிடம் நல்ல வழி எதுவென்று கேட்டுப் பார்ப்போம் என்று தீர்மானித்தான். அதற்குமுன் அவரது நூல்களில் அவன் படித்த வாசகங்களைத் திருப்பிப் பார்த்தான்.

"மனமற்ற நிலை என்ற ஒன்று கிடையாது. புதிய நிகழ்வுகள் வரும் பொழுதெல்லாம், புதிய அனுபவமும், அதை அனுபவிப்பவனாகிய நானும் உண்டாகிக் கொண்டே தான் இருக்கும். அனுபவத்திற்கு ஏற்ற உணர்வுகள் வந்து கொண்டேதான் இருக்கும்".

அத்தகைய உணர்வுகள் எதுவானாலும் இயல்பில் ஓடி மறையும். நீங்கள் அதன்மேல் ஆசை அல்லது வெறுப்பு வடிவில் பற்று வைக்காத வரையில் நிகழ்வுகள் வரும், போகும். அனுபவம் வரும் போகும். உணர்வுகள் வரும், போகும். நீங்கள் அதைப் பற்றிப் பிடித்து உயிர் கொடுக்காத வரை அவை ஓடி மறையும். ஏதேனும் ஒரு உணர்வில் தேக்கமடைந்து சிக்கிக்கொள்ளாதவரை எந்த உணர்வு வந்தாலும் சென்றாலும் தவறில்லை. ஞானம் என்பது அடைய முடியாப் பெருநிலை என்றோ, அது ஒரு அதீத சக்தி நிலை என்றோ, கற்பனை செய்வதும் ஒரு பற்றிப்பிடித்தலேயாகும். எந்த உணர்வையும் பற்றிப் பிடிக்காமல் ஓட அனுமதிக்கும் எளிய நிலையே ஞானநிலை. பற்றிப் பிடிப்பது மனதின் தன்மை; அது அஞ்ஞானம். பற்றிப் பிடிக்காமல் ஓடவிடுவது - அது ஞானம்.

உலகில் நிகழ்வுகள் நிகழக் கூடாது - நமக்கு உணர்வுகள் எதுவும் வரக்கூடாது என்பது இயற்கைக்கு முரணான கற்பனை. 'வருவது வரட்டும் - ஓடவிடு ' என்பது நடைமுறை உண்மை - ஞானநிலை.

அவனுள்ளிருந்து ஒரு நிம்மதிப் பெருமூச்சு வந்தது.

**Dr. நா. கைலாசம்,** B.H.M.S.,
தலைவர், ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.
செல் : 9443290559

## பரிபூரணச் சரணாகதி

சரணாகதி என்பது சோம்பேறித்தனமாக ஒரு வேலையும் செய்யாதிருப்பது என்ற கருத்து மிகவும் தவறு. சரணடைந்த பக்தன், சாதாரணமானவர்களை விட மிக மிக உற்சாகத்துடன் அதிகவேலைகளைத் திறம்படச் செய்வான்.

'தான் செய்யும் செயல்கள் அனைத்திற்கும் இறைவனே கர்த்தா' என்பதை அவன் நன்கு அறிவான்.

மேலும் 'நாளை என்னுடைய கதி என்ன?' என்ற சிந்தனை சிறிதுமின்றி, தன் எதிர்காலத்தைப் பற்றி ஒரு துளிகூடப் பயமின்றி ஆனந்தமாக வாழ்வான்.

அவன் மனம் முழுவதும் தன்னை ரக்ஷிக்கும் இறைவனின் கருணையும் அவனது உணர்வுகளுமே நிரம்பியிருக்கும்.

இதையே ஸ்ரீராமகிருஷ்ணர், 'பரிபூரண சரணாகதியின் தன்மை எப்படிப்பட்டது? களைப்படைந்தவன் அன்றைய வேலை முடிந்த பிறகு தலையணையின் மீது சாய்ந்து கொண்டு நிம்மதியாய் புகைப்பிடிக்கும் ஆனந்த நிலைமையைப் போன்றது. துயரமும் துன்பமும் இல்லாத நிலை' என்பார்.

நாமும் நமது எதிர்காலத்தைப் பற்றிய தேவையில்லாத எதிர்பார்ப்புகளையும், பயத்தையும் ஒழித்து இறைவனை அடைக்கலம் புகுவோம்.

- ஸ்ரீ இராமகிருஷ்ணா மிஷன் ஆண்டு மலர் - 2011

## தன்னுணர்வு

பணம், பணமாக இருப்பது பிரச்சினையாக இல்லை, நீங்கள் 'பணம் உடைய மனிதர்' என்று கூறினால் அது பிரச்சினையாகிறது. வைரம், வைரமாக இருக்கும் வரை பிரச்சினை ஏதுமில்லை. "இந்த வைரம் எனது உடைமை" என்று கூறுகையில் அது பிரச்சினையாக உருவாகிறது. வைரத்திற்கு அகம்பாவம் கிடையாது. ஆனால், அதன் மீது உடைமை கொள்பவர் அகம்பாவம் உடையவராக இருக்கிறார். இதுதான் மனிதர்களின் பிரச்சினை. விலங்கினங்கள் உணர்வை உடையனவாக இருப்பினும், தன்னுணர்வு இல்லாத காரணத்தினால், அவைகளிடத்து இத்தகைய போராட்டங்கள் இல்லை. இந்த இரு கருத்துக்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு மிகப் பெரியது.

நாய்க்கு உணர்வு உண்டு; ஆனால் தன்னுணர்வு கிடையாது. நீங்களோ உணர்வும் தன்னுணர்வும் உடையவர். உங்களிடம் உணர்வும், 'நான் வறியவன்', 'நான் செல்வந்தன்' முதலிய அந்தஸ்து பற்றிய உணர்வும் இருக்கின்றன. நீங்கள் செல்வந்தராக இருந்தால், ஏழைகளின் மத்தியில் காணப்படுவதை விரும்பமாட்டீர்கள். நீங்கள் வறியவராக இருந்தால், உங்களிடம் ஏழ்மை பற்றிய உணர்வு உள்ள காரணத்தினால் செல்வந்தர்கள் மத்தியில் செல்ல அஞ்சுவீர்கள். இதுதான் தன்னுணர்வு.

உங்களிடமும், இந்த மாநில கவர்னரிடமும் நாய்கள் உள்ளன என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் இருவரும் காலையில் வாக்கிங் செல்லும் பொழுது இந்த நாய்களை அவிழ்த்து விட்டால், அவை ஒன்றின் மீது ஒன்று பாய்ந்து விளையாடத் தொடங்கிவிடும். கவர்னரின் நாய் உங்களது நாயைப் பற்றி, கீழானது என்று எண்ணாது. கவர்னரின் நாய்க்கு, தான் உயர்ந்தது என்ற எண்ணம் கிடையாது. உங்களது நாயும், தான் சாதாரண மனிதனுக்கு சொந்தமானது, எனவே கவர்னரின் நாயை நெருங்க முடியாது என்று எண்ணுவதில்லை. ஆனால் கவர்னர் சாதாரண மனிதரிடம் பேச மாட்டார். தன்னுணர்வு கொண்ட பணக்காரர் ஏழையிடம் பேச மாட்டார். நீங்கள் தன்னுணர்வு கொண்டிருக்கும் சமயத்தில் எல்லாவற்றையும் இழுத்து உங்கள் மீது போட்டுக் கொள்கிறீர்கள்.

நன்றி - வாழ்க்கையே தியானம் - ஸ்வாமி சுத்தானந்தா

தொகுப்பு : **திரு. சரண்குமார்**
Zen Sung அகநூலகம், திருச்சி
செல் : 98940-12639

## கடவுளின் தூரம்

### கடவுளுக்கும் உனக்கும் எவ்வளவு தூரம்?

கிழக்கிற்கும், மேற்கிற்கும் எவ்வளவு தூரமோ
அவ்வளவு தூரம்தான் . என்ன பார்க்கிறாய்?
கிழக்கிற்கும், மேற்கிற்கும் எவ்வளவு தூரம் என்றா?
பயப்படாதே;

**அது, நீ திரும்புகிற தூரம் தான்.**
**அது சரி ... நீ திரும்புவது எப்போது?**

(Ref, "உங்களுக்காக" பக்கம்-50)

தொகுப்பு : திரு. சரண்குமார்,
Zen Sung அகநூலகம், திருச்சி-8.
செல் : 98940-12639

## இலவச Download

ஸ்ரீ பகவத் ஐயாவின் தமிழ் மற்றும் ஆங்கிலப் புத்தகங்கள் அனைத்தும், ஸ்ரீ பகவத் மிஷன் வெளியீடான "பகவத் பாதை" மாத இதழையும் www.pravaagam.org என்ற இணைய தளத்திலிருந்து இலவசமாக Download செய்து கொள்ளலாம்.

பொதிகை, சங்கரா, கலைஞர் ஆகிய தொலைக்காட்சிகளில் **அய்யா** அவர்கள் ஆற்றிய வீடியோ உரைகள் மற்றும் தமிழ், ஆங்கிலம், கேள்வி-பதில் வீடியோ உரைகளையும் http://shribagavath.blogspot.com. http://bagavathayya.blogspot.com- ஆகியவற்றில் காணலாம்.

இந்த வசதியை உங்கள் நண்பர்களுக்கும் தெரியப்படுத்தி பயன்பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்

### குறிப்புகள்

நீங்கள் இம்மாத இதழை மாதந்தோறும் உங்களின் e-mail மூலம் பெறுவதற்கு உங்கள் e-mail ID தொலைபேசி எண், அலைபேசி எண் மற்றும் வீட்டு முகவரியையும் கீழ்க்கண்ட e-mail-ல் பதிவுசெய்வது அவசியம்

bagavathpathmonthlymagazine@gmail.com (or) jeevamani@pravaagam.org

**நமது இதழை விரும்பிப் படிக்கக்கூடிய அன்பர்களின் முகவரிகளை அனுப்பிவையுங்கள்.**

## ஸ்ரீபகவத் அவர்களின் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நீங்களும் ஞானியாகலாம் | – ரூ. | 40 |
| 2. | கவலைகள் அனைத்திற்கும் தீர்வு | – ரூ. | 100 |
| 3. | ஞானமலர்வு | – ரூ. | 15 |
| 4. | தியானத்தை விடு ! ஞானத்தைப் பெறு ! | – ரூ. | 90 |
| 5. | சும்மா இரு | – ரூ. | 30 |
| 6. | நான் யார் ? | – ரூ. | 20 |
| 7. | சூன்யப் பிரவாஹம் ( ஆனந்தகுமார் ) | – ரூ. | 65 |
| 8. | ஞானப் பட்டறை | – ரூ. | 60 |
| 9. | ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு | – ரூ. | 60 |
| 10. | தேடிப்போக வீடு இல்லை | – ரூ. | 30 |
| 11. | ஸ்ரீ பகவத் பார்வையில் ஜென் கதைகள் | – ரூ. | 40 |
| 12. | சத் தரிசனம் | – ரூ. | 60 |
| 13. | ஆகாமிய கர்மா | – ரூ. | 60 |
| 14. | ஞான விடுதலை | – ரூ. | 50 |
| 15. | ஆன்ம ஞான ரகசியம் | – ரூ. | 60 |
| 16. | அனுஷ்டான ஆன்மீகம் | – ரூ. | 150 |
| 17. | தீய பழக்கங்களை விடமுடியுமா? | – ரூ. | 10 |

English Books

| | | | |
|---|---|---|---|
| 1. | Don't Delay Enlightenment | – ரூ. | 100 |
| 2. | Give up Meditation ! Get Enlightenment ! | – ரூ. | 300 |
| 3. | Renounce God ! Be God ! | – ரூ. | 200 |
| 4. | Absolute Reality | – ரூ. | 150 |

**All English Books are Available in Higgin Bothams Book Stores**

Audio Books

| | | | |
|---|---|---|---|
| 1. | ஞான விடுதலை | – ரூ. | 150 |
| 2. | நீங்களும் ஞானியாகலாம் | – ரூ. | 100 |
| 3. | Don't Delay Enlightenment | – ரூ. | 150 |
| 4. | ஞான மலர்வு – ஐயா உரை | – ரூ. | 100 |
| 5. | கர்ம வினைகளுக்கு அறிவியல் ரீதியான பரிகாரங்கள் – ஐயா உரை (Video) | – ரூ. | 100 |

**நூல்களைப் பெற :**

## ப்ரவாகம் பப்ளிகேஷன்ஸ்

*31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003. தமிழ்நாடு, இந்தியா*

தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

*To*




*If undelivered please return to:*

**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**Mobile : 94432 90559, 99942 05880**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : jeevamani@pravaagam.org

Published by Shri. V.A.P.Sharavananon behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem - 636 003. Editor : Shri. A.Senthilnadhan, cell : 99421 81933.